29th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது 3 நிலையங்கள் தொடங்கப்பட்டிருப்பது பற்றி குறிப்பிட்டேன். அதைத் தவிர வேறு தகவல்கள் என்னிடம் இல்லை.

*Children studying in schools*

*594 *Q*.— SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 5 முதல் 14 வயது வரை கல்வி கற்கத் தகுதியுடையவர்கள் ஜாபிதாவானது எந்த வருஷத்தில் தயாரிக்கப்பட்டது ?

(ஆ) இந்த ஜாபிதா பிரகாரம் கல்வி கற்கத் தகுதியுடைய சிறுவர்கள் சிறுமிகளுடைய எண்ணிக்கை எத்தனை ? (ஜில்லாவாரியாக.)

(இ) 1957–58-ல் இவர்களுள் எத்தனை சிறுவர்களும், சிறுமிகளும் கல்வி கற்றனர் ? (ஜில்லாவாரியாக.)

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*), (*b*) & (*c*) Statistical data for the year 1956–57 for the whole State excluding Kanyakumari district is alone available and given below. District-war figures are not available.

Estimated population in the age group 5—14 (excludes data regarding Kanyakumari district as they are not available)—

| | |
|---|---|
| Males ... ... ... | 3,585,882 |
| Females ... ... ... | 3,612,557 |

Children under instruction in the age-group 5—14 during the year 1956–57—

| | |
|---|---|
| Boys ... ... ... | 1,928,020 |
| Girls ... ... ... | 1,075,406 |

SRI P. G. MANICKAM : 1965-வது ஆண்டுக்குள்ளாக இந்த மாணவர்களுக்கெல்லாம் இலவசக் கட்டாயக் கல்வி அளிக்கப்படும் என்று சொன்னார்கள். அதற்காக திட்டங்கள் இப்பொழுது வகுக்கப்பட்டிருக்கின்றன. இவை ஜில்லா வாரியாக ஆரம்பித்திலே எடுத்து செய்யப்படுமா ? அல்லது ஏககாலத்தில் எல்லா இடங்களிலும் அமுலுக்கு வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பிளாக் வாரியாக செய்யப்படும்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I understand that special staff have been appointed for taking statistics in regard to the number of children and the introduction of schools in schoolless areas. Have the Government received any report from the Director of Public Instruction and, if so, will they place it on the table of the House?

THE HON. SRI C. SUBBRAMANIAM : Survey has been completed. I am not quite sure whether the report has been received in the Secretariat. As soon as it is available, it will be placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : சாதாரணமாக ஆரம்பப்பள்ளியில் ஐந்தாவது வரையில் படித்தவர்களுக்கு உயர்நிலை பள்ளிகளில் சேருவதற்கு இடம் கிடைக்கவில்லை. வேலூரில் 600 பிள்ளைகளில் ஏறத்தாழ

[29th September 1958

120 பிள்ளைகளுக்குத் தான் உயர்நிலை பள்ளிகளில் இடம் கிடைத்திருக் கிறது. மற்றவர்கள் வீடு திரும்ப வேண்டியிருந்தது. அதைப் போக்கு வதற்கு அரசாங்கத்தினிடம் திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கேள்வியில் சில புள்ளி விவரங்கள் கேட்டிருக்கிறார்கள். கல்வி வசதி பற்றி தனியாகக் கேள்வி கேட்டால் பதில் சொல்லுகிறேன்.

9-10 a.m. SRI N. MARUDACHALAM : பிளாக்கு வாரியாக செய்யப்படும் என்று சொன்னார்கள். எந்த பிளாக்கை முதலில் எடுத்துக் கொள் வார்கள் ? கோயம்புத்தூர் பிளாக்கு எப்பொழுது எடுத்துக் கொள்ளப் படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது அடுத்த வருஷத்திலிருந்து ஆரம்பமாகிறது.

SRI K. B. S. MANI : தோதுவர்கள், நரிக்குறவர்கள், போன்ற வர்கள் எவ்வளவு சேர்க்கப் பட்டிருக்கிறார்கள் ? அப்படிச் சேர்க்கப்பட வில்லை யென்றால், அவர்களுக்கு ஒரு தனிச் சலுகை காட்டி' தனி ஏற்பாடுகள் செய்து . . . .

MR. SPEAKER : இந்தக் கேள்வியையே ஒரு தனிக் கேள்வியாகப் போட்டால் நல்லது. (சிரிப்பு.)

SRI. A. V. P. ASAITHAMBI : குழந்தைகள் கல்வி கற்க வேண்டியது ஐந்து வயது முதல் என்று நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. அந்த முறையில் கல்வி கற்க தாமதமாகிவிடுவதனால், அந்த வயதை நாலு என்று குறைத்து நிர்ணயிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : புதிதாக ஒரு தத்து வத்தை அங்கத்தினர் சொல்கிறார். அதை அதிகமாக விளம்பரம் செய்து, மற்றவர்கள் ஒப்புக்கொள்ளும்படி செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

*Famine*

* 595 *Q.*—SRI P. U. SHANMUGAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டத்தில் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) பஞ்ச நிவாரண வேலைகள் எடுக்க சர்க்கார் ஏதேனும் உத்தரவு பிறப்பித்துள்ளார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Famine conditions are not prevailing in North Arcot district and no area in the district can be said to be affected as such.

(*b*) The rainfall in the district in 1957 having been less than the normal, the Collector has suggested to Government certain relief measures to the ryots this year which are under consideration.

SRI P. U. SHANMUGAM : மழை பெய்யாததால் பஞ்ச நிலைமை இல்லை என்று சொன்னார்கள். அதே சமயத்தில் மழையில்லாததால், பஞ்ச நிலைமைக்கு நிவாரண வேலைகள் செய்யப்படுகின்றன என்றார்கள். அந்த வேலைகள் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மழை சரியாகப் பெய்யா விட்டால் கஷ்டம் உண்டாகும். அதனால் பஞ்சம் உண்டாவதில்லை. ரொம்ப காலத்துக்கு மழையில்லாவிட்டால், பஞ்சம் வரலாம். நிவா